நெறியார்நிரைமாவொடுதேர்களொடுத்
தெறியாவுதையாநுதலேறுகரம்
பறியாமுறியாப்படையோர்படையுட்
செறியாமதயானைதிரிந்தனவே. (கOஎ)

கடுநீரவர்கண்ணெரிகொண்டுகனன்
றிடிநீருருமின்னெதிரேயெறிய
வடிநீரென * வானிடையேமுரியாப்
படுமீனெனவீழ்ந்துபதைத்தனவே. (கOஅ)

வடிநாணுதிகவ்வியவாளையொடும்
விடுமீனெறிதூண்டில்விசைத்தனபோ
னடுநாணிடையேறியவம்பினொடு
நெடுநாணறவிற்கணிமிர்ந்தனவே. (கOகூ)

வேறு.

ஆரழலான்பெயரானணிவெஞ்சிலை
போரழல்வார்கணைமாரிபொழிந்தது
சீர்கெழுவிஞ்சையர்செங் † தடிநுங்குபு
நீர்கெழுவெள்ளநிரந்ததையன்றே. (கக0)

தென்மலையார்திறன்மன்னவன்மன்னிய
வின்மலைவார்தனியின்மையின்விஞ்சையர்
பொன்மலையொன்றொடுபோர்செயமேவிய
மன்மலைபோலவெழுந்துமலைந்தார். (ககக)

கோளெனநாளெனமின்னுபுகுன்றெறி
வேளனையான்மிசைவிஞ்சையர்வெஞ்சுடர்
வாளினர்வில்லினர்மால்வரைபோல்வன
தோளினர்தாளினர்தோன்றினரன்றே. (ககஉ)

தோன்றியவிஞ்சையர்மேற்றொடுவெங்கணை
கான்றதுதிண்சிலைகான்றலுமேதிசை
மான்றதுமங்குல்பரந்ததுகாரிரு
ளூன்றதுநண்ணலர்கண்ணலரானார். (ககங)

---

* வாளிடையென்றும்பாடம். † தடி—ஊன்.

காலெதிர்கடலுடைந்திட்டதொப்பநம்
பாலதுபடையுடைந்திட்டதின்றென,
மாலெதிர்கடற்படைமானவேந்தனைக்
கோலெதிர்கையவன்றொழுதுகூறினன். (க௨க)

நூற்பயம்பலவொடுநுணங்குகேள்வியே
போற்பயம்பலவொடுபுகழ்களைதரும்
வேற்பயங்கொண்டனர்விரவலார்நமர்
காற்பயங்கொண்டனர்காலவேலினாய். (௪௨௨)

பெரியவாய்ப்பிறையெயிறிலங்கநக்குநக்
குரியவாளெரியெழவோச்சிநம்மொடு
* பொரியவந்தார்களும்புறந்தந்தாரினி
யரியதென்னெனநக்காரவனிமன்னரே. (க௨௩)

கலையினைக்கடந்தசொற்கன்னிகாதல
னலையினுக்குடைந்திலரருக்கன்கையதோ
சிலையினுக்குடைந்துதஞ்சிறுமைநாணிநம்
மலையினுக்கடைந்திலர்மானமன்னரே. (க௨௪)

ஒன்றுவில்லிரண்டுதோளொருவனெய்யவே
யின்றுநம்படையுடைந்திட்டதாய்விடி
னென்றுபோர்நமர்களதென்றுநக்கனன்
குன்றுபோற்பெருகியகுவவுத்தோளினன். (க௨௫)

இரதநூபுரத்தின்மேலெழுந்தவேந்தரும்
பொருதுதாமழிந்தமர்புறக்கிட்டோடினா
ரரிதினின்விளைவதையன்றியாவருங்
கருதியமுடிப்பவரில்லைகாண்மினே. (க௨௬)

பாழிப்போருடைந்தனர்பகைவர்க்கின்றென
வாழிப்போர்த்தடக்கையாற்கவர்கணீர்மையைத்
தாழிப்போர்விலன்றமனொருவன்கூறினா
னூழிப்பேரெரியுணெய்யுகுத்ததொப்பவே. (க௨௭)

---

* பொரீஇயவென்பதன்விகாரம்.

விண்மிசைசென்றவர்மெலிவும்வேற்றவர்
மண்மிசைசென்றவர்மறிந்தமாற்றமும்
புண்மிசையெஃகம்புக்கொளிப்பபோன்மனத்
துண்மிசையொழிபடையாகியூன்றவே. (க௨அ)

இருந்தினியென்னையிங்கெழுகவென்றுபோய்ப்
பெருந்தகையருங்கலப்பெயர்கொள்குன்றின்மேற்
பரந்தனபடையொடுபொடிவிட்டனன்
கருந்திரண்முகில்புரைகாளமேனியான். (க௨௯)

அச்சுவக்கிரீவனுக்கிளையராயினோர்
கச்சையங்கருங்களியானைவல்லவர்
விச்சையர்கடற்படைபரப்பிவிண்மிசை
நச்செரியுமிழ்தருநகையர்தோன்றினார். (க௩0)

இளையருட்பெரியவன்சொல்லுமெம்மிறை
புளைவனசெய்தவருயிரைமற்றவர்
கிளையொடுங்கீண்டரசாண்டுமன்றெனில்
வளையொடுந்தலைமுடித்திருந்துவாழ்துமே. (க௩க)

மாலுமாங்குடையர்கொன்மனிதர்நம்மொடு
போலுமாற்பொரலுறுகின்றதென்றுதன்
கோலவால்வளையெயிறிலங்கக்கூறினான்
நீலமாமணிக்கண்டனென்னுநேரிலான். (க௩௨)

முளைந்தவாளெயிற்றவர்முலைகள்பாய்ந்துதேன்
விளைந்ததார்வெறிகொளவைகும்வேற்றவ
ருளைந்தபோர்நிலத்தினுள்ளுருள்பவென்றனன்
வளைந்தவாளெயிற்றவன்வயிரகண்டனே. (க௩௩)

ஒத்திலங்கொண்சிறையுவணன்றன்னொடு
பைத்திலங்கரவுகள்பகைப்பபோன்மெனக்
கைத்தலங்கையொடுபுடைத்துநக்கனன்
றொத்திலங்கலங்கலான்சுகண்டனென்பவே. (க௩௪)

தம்பியர்மொழியெனுந்தயங்குமாரியால்
வெம்பியகொடுமனங்குளிர்ந்துவெய்யவ
னம்பெயர்முனிந்தவர்நயந்தமண்மிசை
நும்பெயர்நிறுத்துமினென்றுநோக்கினான். (கஙரு)

நஞ்சினைநஞ்சுசென்றெரிக்கலுற்றபோல்
விஞ்சையர்வெஞ்சினம்பெருக்கிமேல்வர
வஞ்சமின்மணியொளிவண்ணன்றானையு
மெஞ்சலின்றெழுந்தெதிரூன்றியேற்றதே. (கஙசா)

விண்ணினதளவுமேல்வந்தவேற்படை
மண்ணினதளவுமாறேற்றவாட்படை
கண்ணியகடற்படையிரண்டுதம்மையு
மெண்ணினிநமக்கெளிதாவதில்லையே. (கஙஎ)

கடலிரண்டுளவெனிற்கடுக்குமக்கட
லிடைநிலமுடைமையினென்றுமொப்பில
வடலரும்படையவையிரண்டுமெவ்வழி
யடலரும்படையவையிரண்டுமொக்குமே. (கஙஅ)

திண்டிறற்றேர்களேசெறிந்தவென்னவுங்
கொண்டபோர்வேழமேகுழீயவென்னவும்
விண்டவழ்புரவியேமிடைந்தவென்னவுங்
கண்டவர்கண்டுழிக்கலந்துதோன்றுமே. (கஙகூ)

கைவலப்படையினர்கழலர்கச்சையர்
செவ்வலர்க்கண்ணியர்செங்கணாடவ
ரீவ்வுலகிவர்க்கிடமில்லைமுன்னிவ
ரெவ்வுலகுடையவரென்னத்தோன்றினார் (கச0)

அன்றுபோர்மலைந்ததுதானையாயிடைச்
சென்றுபோர்படுமிடந்திசைகளின்மையா
னின்றுபோராடவர்நேரொப்பார்களோ
டொன்றுபோருலகினையூழியொத்ததே. (கசக)

பேரினும்பெருகியசின்னந்தன்னினுந்
தாரினுமாறுமாறெறிந்துதம்முளே
தேரினுந்தேரினுங்கிளைக்கின்றார்சிலர்
காரினும்பெரிதவர்கணைபெய்மாரியே. (கசஉ)

தாளிடைமிடைந்தனதாள்கடம்முளே
தோளிடைமிடைந்தனதோள்கடோளிடை
வாளிடைமிடைந்தனவாள்கண்மற்றிவை
நாளிடைப்படுங்கொலோநாங்கள்சொல்லினே. (கசங)

குடைநிலைமறைப்பவுங்கொடிகளோப்பவு
மிடைநிலமிருண்மெழுக்கிட்டதாயிடைப்
படைநிலவிலங்கவும்பணிகண்மின்னவு
மிடைநிலமிடையிடையிலங்கித்தோன்றுமே (கசச)

கருப்புடைக்கைகளாற்புடைத்துக்கண்களு
ணெருப்பொடுநெருப்பெதிரெதிப்பயானைகண
மருப்பொடுமருப்பிடைமிடைந்துமான்றரோ
பொருப்பொடுபொருப்பவைபொருவபோன்றவே. (கசரு)

கறங்கெனக்காலசக்கரங்கடாமென
மறங்கிளர்மன்னர்தம்மகுடநெற்றியு
முறங்கலில்கடாக்களிற்றுச்சிமேலுமாய்த்
திறங்கிளர்புரவிகடிரிதர்கின்றவே. (கசசு)

செம்பியல்கிடுகினசெம்பொற்றட்டின
வம்புபெய்தூணியவரவத்தேர்க்குழாம்
வெம்பியகணைமழைவிரவிவில்லொடு
வம்புபெய்மழைமுகில்பொருவபோன்றவே. (கசஎ)

இன்னவின்னுழியின்னசெய்பவென்
றென்னவராலிவுமங்கிடைபுகாவகை
மின்னவிலெஃகினுமிடைந்தவர்ளினு
மன்னவர்செருத்தொழின்மயங்கியிட்டதே (கசஅ)

வேறு.

அச்சமுடையாரகல்கவாற்றுபவரேற்க
வெச்சமில்குடித்தலைவர்போகவெனவெங்குங்
கச்சையர்கருங்கழலர்காலணையுமோனார்
வெச்செனவிழித்துவிறல்வீரர்திரிகின்றார் (கசகூ)

ஏற்றவரிமைப்பினுமிகழ்ந்தெறிதல்செய்யார்
தோற்றவர்புறக்கிடைதொலைந்தவரைநோக்கார்
வேற்றவரைவீரநெறிகாண்மினிதுவென்று
தேற்றுவனர்போலவுணர்சென்றுதிரிகின்றார். (கரு௦)

தாருடையமார்பினிடைசார்கணைகுளிப்ப
வேரொடுபறித்தனரெழுத்துவரிநோக்கிப்
பேரொடுறுபீடுடையனாரெனவினாவி
சீர்படுதுமென்றுசிலர்தேடுபுதிரிந்தார். (கருக)

கேடகமிடத்ததுவலக்கைகிளரொள்வா
ளாடகமடுத்தவணிபூணலர்தாரான்
றோடகமடுத்ததுதைகண்ணியொடுதுன்னு
னூடகமடுத்தொருவனுந்திகனிவந்தான். (கருஉ).

வெறிமின்விரிகின்றவிறலாழியிறைதோழ
னறிமின்பெயர்யானவ்வரிசேனனெனநின்றே
னெறிமினெதிரென்னொடிகல்வல்லிருளராயின்
மறிமினதுவன்றியுயிர்வாழலுறினென்றான். (கருங)

அங்கவன்மொழிந்தமொழிகேட்டலுமருக்கன்
வெங்கணைதெரிந்ததுவிலக்கிவிறல்வெய்யோ
யிங்கிவனினக்குநிகரோவெனவிசைத்தே
பொங்குபுலித்தேர்ப்பெயரன்போந்துபொரலுற்றான். (கருச)

பொன்னையணிகொண்டபுனைகேடகமெடுத்து
மின்னையுமிழ்கின்றசுடர்வாண்மிளிரவீசி
நின்னையறியாதவர்கணின்றிரியவந்தா
யென்னையறியாயறியினித்தவிர்தியென்றான். (கருரு)

நின்னையறிவன்பெரிதுநின்முறையுளாய
கன்னியையோர்காளைபிறனெய்துவதுகண்டு
மன்னுமணவில்லுள்வயிறாரவயில்கின்றாய்க்
கின்னுமுளவோபுதியவென்றுமிகநக்கான். (க௫௬)

கன்னியர்தம்பான்மைவழிசெல்பவதுகண்டோய்
முன்னியமொழிப்புலவர்நூன்முறைமையேடா
வன்னதறியாதவனய்க்கிரிவனனறே
யென்னையறியாமைநினக்கின்னுமுளதென்றான். (க௫௭)

வாயுரையிருக்கரமவாளினொளிவாயாற்
றீயுரைசெகுத்துமலைகென்றுசெயிர்கொண்டு
காயெரிவிழித்தனர்களித்தனர்தெளித்தார்
மாயிருவிசும்பிடைமடுத்துமலைகுற்றார். (க௫௮)

தங்கொளிதயங்குமணிகேடகமுமேனைச்
செங்களிமயிர்ப்புளகசேடகமுமேந்தித்
திங்களொளிஞாயிறுதிளைத்திருவிசும்பி
னங்கண்மலைகின்றவுளவேலவையுமொத்தார். (க௫௯)

போரிகலியாரமொடுபூண்மணிகண்மின்ன
நேரிகலும்வாள்களொடுகேடகநிழற்றச்
சாரிகைகறங்கெனமலைந்துதனிசுற்றி
நீரகவளாகமடுசக்கரநிகர்த்தார். (க௬0)

ஓவிலயில்வீசுமொருவன்னதுவிலக்குங்
காவலொடுமீளுமொருவன்னவர்கருத்தி
ஞவததுவன்றியயனின்றவர்கள்காணும்
பாவனையரல்லர்பலபாடியினியென்னே. (க௬௧)

கொங்கெரியிரும்பெறிஞர்கோற்செய்களனைத்தும்
வந்துவனவேங்கைமலர்கால்சிதர்வபோன்று
நுந்தியவர்வீசுமொளிவாணுதிகடாக்கிச்
சிந்தினதழற்பொறிசிதர்ந்ததிசையெல்லாம். (க௬௨)

ஆளமெட்டற்றகையனுய்வரிசேனன்
நீறொளொடுதுதைந்தெறியும்வாளதனைநோக்கிக்
கோளொடுமெடுத்தகுளிர்மாமதியமேய்ப்ப
வாளொடுமெடுத்துமணிகேடகமறைத்தான். (க௬௩)

ஆங்குமுன்னெறிந்துபெயர்கின்றவரிசேனன்
பூங்கமழலங்கலுடைமார்பமிருபோழாய்
நீங்கவெறிந்தானெடியமார்கிளையகாளை
யோங்கியவிசும்பினவர்கண்டனரொளித்தார். (க௬௪)

வேறு.

அழலான்பெயரவன்மைத்துனனரிசேனனையெறியக்
கழலான்கடலொளியான்றமர்கலந்தார்த்தனர்கரிபு
நிழலான்றமர்கரிந்தார்சிலரிரிந்தார்பலர்நெரிந்தார்
தழலாரயில்வலனேந்துபுசார்ந்தார்தலைசரிந்தார். (க௬௫)

அரிசேனனங்கழிவாதல்கண்டயில்வாளொளிமிளிரா
விரிசீர்வட்டமிகுகேடகஞ்சுழலாநகுவருவான்
பரிசேரணியுயர்தேர்பலமதயானையுமெறியாத்
திரிசாரிகைநிகராயெவர்திறலாரெனவினவும். (க௬௬)

சிகரம்முடிதிருமாமணிசெறிகுண்டலமிலங்கத்
திகிரிப்படையரசன்றிறல்சிறக்கவெனப்புகழ்ந்து
பகருங்கலகுணசேனனும்பருவம்முகிலிடிபோற்
புகரும்மதகளிறென்னவும்புலியென்னவுந்திரிவான். (க௬௭)

வேறு.

அருக்ககீர்த்திதன், பெருக்கம்வாழ்த்தியே
திருக்கைவேலினு, னெரிக்குமாற்றலான். (க௬௮)

பொன்னெங்குன்றவன், மின்னும்வாளினன்
மன்னன்றேழனு, முன்னிவந்தனன் (க௬௯)

வந்தவன்பெய, ரிந்திரன்னெனுங்
கந்துகொல்களி, றுந்துகாமனே (க௭௦)

இருவரும்மெதிர், பொருதும்வேலையி
னருகுகின்றவர், வெருவியோடினர் (களக)

வாளினலொரு, தோளைவீழ்த்தவோர்
தோளினலவன் வாளையிட்டனன். (களஉ)

இட்டவாள்கர, மொட்டித்தட்டிப்பி
னட்டமாகென, வெட்டிவீழ்த்தினன். (களங)

வேறு.

குணசேனன்வீழக்கண்டுகூற்றினுங்கொடியவீரா
னிணைசேனைதன்னுளுள்ளோனியம்பியகளிப்பின்மிக்கான்
கணைசேர்ந்ததூணித்தோளான்கைச்சிலைபிடித்துக்கொண்டு
திணைசேரவருகவென்றுவரசேனன்றிகழ்ந்துநின்றான்.

மற்றவனிற்பதோர்ந்துமதகளிறனையகாளை
கொற்றவனருக்கீர்த்திகுணம்புகழ்ந்தாடிப்பாடிக்
கற்றவன்கலைகளெல்லாங்காமுகனென்னும்பேரான்
பற்றியவில்லுமம்பும்பாங்குடன்பரித்துவந்தான். (களரு)

வில்லொருகையினேந்திவெங்கணைகுழையவாங்கிச்
சொல்லருமாரிபோலத்தொடுத்தவன்விடுத்தலோடு
மல்லுறுகாளைதன்மேல்வராமலேவிலக்கியிட்டுக்
கல்லெனக்கலங்கிவீழக்கைச்சிலைகணையேவிட்டான். (களசு)

கார்செயன்முழங்கியார்ப்பக்காளையுங்கனன்றுமிக்க
வார்சிலைவணங்கவாங்கிவாய்புகவிடுத்தலோடும்
போர்செயுங்களத்துவீழ்ந்தான்புகழ்வரசேனனென்னத்
தார்செய்தானவர்கடம்முட்டானவனொருவனவந்தான். ()

வேறு.

சூடர்மாலைகட்டலைசூடினகுழவித்தலைகுழையாப்
படர்காதினுள்ளவைபெய்தனபகுவாயதுகுருதித்
தொடர்மாமழைதயார்கைதணியாவவையிடையே
சுடர்மாலைகள்விடுசூலமொடொருவன்றிரிகின்றான். (களஅ)

கள்ளாவதுகுருதிப்புனல்கலனாவதுகையே
நள்ளாதவருடலம்பிறகறியாவதுநமக்கேன்
றுள்ளாதவருளராங்கொலிவ்வுலகின்னெனவுரையா
விள்ளாதவர்சிலர்பின்செலவிரல்வீணைகள்விளியா. (௧௭௯)

களியானையினெயிறுயினபறியாவவைகறியா
வளியாதுபல்படையாளர்களடையார்களையுடனே
யொளிவாளிடையிடைவிட்டுடலுருவாவுயிர்பருகாத
தெளியாதெதிர்வருவாரயிலுருவாவவைசெறியா. (௧௮௦)

எரிபோல்வனசுரிபங்கியொடிருள்போலிருண்மெய்யோ
டரிபோலதிரகல்வானுறநிமிராவடிபுடையாப்
பரிபோல்வனபிடியாவுடலடியாவிடைபடுதேர்
பொரிபோலெழவுதையாவிவன்வருகின்றதொர்பொலிவே. ( )

ஆழிப்படையுடையான்றமனரிகேதனனென்போன்
பாழிப்படைபொருவாரொடுபயில்போரலதறியே
னேழைப்படையிதுவோவெனக்கெதிராகுவதாயில்
வாழிப்படைபொருதென்னெனவையாநனிவந்தான். (௧௮௨)

கள்ளாற்களியிலனாலிகல்களமண்டியசெருவி
னுள்ளாற்கவியுற்றுனிவனுயிருண்கெனவுருவி
நள்ளாதவர்தலைவவ்வியநகைவாளதுவீசித்
தள்ளாதவனெதிரேமிகுசார்த்தூலகனேற்றான். (௧௮௩)

வரையாலெனமுகிலாலெனவிருளாலெனமறியுந்
திரையார்கடலளவேசெலவிரியுந்நனிசிறுகுந்
நிரையாமுகின்முடிதேய்தரநிமிருந்நிலமிதனுட்
புரையாரிடமறையும்மிதுபொருகின்றதொர்பொலிவே.

மாலைத்தலைவளர்மாமதிநிகரும்வளையெயிறுஞ்
சோலைத்தலைமலைபோல்வனதோளும்மிவையுடையான்
காலைத்தலையிளஞாயிறுபுரைவான்மிசைகதுவாச்
சூலத்தலைநுதியாலவனாகந்துளையிட்டான். (௧௮௫)

இடுவானையவ்விடுசூலமொடுடலும்இருதுணியாப்
படவீசினனயில்வாளதுபடலும்பலமாய
னடைவாய்மையினுருவம்முதலனவேதனதாகத்
தடமால்வரையெனவீழ்தலுமுடைவார்தமரானார். (க௬௬)

வேறு.

வாழுநாளுலந்து மற்றவன்மண்மேன்மலையெனமறிதலும
லைமே, லாழியான்றமர்க ளஞ்சினாரஞ்சு மாயிடையடுதிறலு
டையா, னூழிநாளெரியுங்கூற்றமுமுருமுமொப்பவன்கைப்
படைநவின்றான், சூழிமாலியானைத் துணைமதஞ்செறிப்பத்
தோன்றினன்றூமகேதனனே. (க௬எ)

மலையெடுத்திடுகோமாநிலம்பிளக்கோ மறிகடலறவிறைத்
திடுகோ, வுலைமடுத்துலகம்பதலையாவூழித்தீமடுத்துயிர்களட்
டுண்கோ, சிலையிடத்துடையார்கணைவலத்துடையார்சிலர்நி
ன்றுசெய்வதீங்கென்னே, நிலையிடத்தவருணிகரெனக்குள
ரேனேடுமின்சென்றெனநின்றான். (க௬அ)

வண்டினம்பாடு மாலையன்விசித்த கச்சினன்வயிரப்பூணி
னைத்த, தண்டினன்கழலன்றமனியத்தாரான்சார்ந்தனன்சா
ர்தலுமவனைக், கண்டனனன்றேகடலொளிமேனிக்காளைத
ன்னாமனுக்கிளையா, னுண்டினிநமக்கோர்போரெனவெதிரே
யுவந்துசென்றவற்கிவையுரைத்தான். (க௬௯)

மலையெடுத்திடுவாய்மாநிலம்பிளப்பாய்மறிகடலறவிறைத்
திடுவாய், யுலைமடுத்துலகம்பதலையாவூழித்தீமடுத்துயிர்களட்
டுண்பாய், நிலையிடத்துளரோ நிகரெனக்கென்பாய் நின்றனை
நிகருனக்காகித், தொலைவிடத்தல்லாற்சொல்லிவைநுங்கட்
கொழியுமோதூமகேதனனே. (ககoo)

என்றலுமதுகேட் டெரியுடைத்தேரோ னென்பவனுமிவ
னென்றே, நன்றுநன்றென்று நக்கனனுக்கே நாணிலர்நம்மலை
வாழ்வா, ரின்றெனக்கெதிராய்நீகொலோபொருவாயென்றன
னினையனமொழியாக், குன்றினும்பெரியான்கூற்றினும்வெய்
யோன்கொண்டனன்றண்டுகைவலித்தே. (ககக)

இன்றெனக்கெதிராய்நீகொலோபொருவாயென்றிகழ்ந்து ரைத்தனையேடா, நின்றெனக்கெதிராநீர்மையர்நின்போனிர ம்பவாய்திறந்துரைப்பவரோ,வென்றனனென்னலுமெதிர்தெழி த்தவனுமெழுந்தனனெழுந்தனனிவனு, மன்றுபோர்மலைந்தா ரதிர்ந்ததிவ்வுலகமமரொழித்தரசருநின்றார். (௧௯௨)

ஆர்த்தனதிசைகளதிர்ந்ததிவ்வுலகமலைகடல் கலங்கினவி ருளாற்,போர்த்ததுவிசும்புபுலம்பினவிலங்கல்புரண்டனபொ ருவரைத்துறுகற், சார்த்தினர்புடைக்குந் தண்டினரெதிரத் தாங்கியும்வாங்கியுந்தடுத்தும், வேர்த்தனர்மெய்யால்வெது ம்பினர்மனத்தால்விசும்பினைமயங்கவேதிரிந்தரர். (௧௯௩)

கண்டவர்க்கெல்லாங்கண்ணுளார்போல்வார்காண்டலுக் கரிதவருருவந், தண்டினதெளியுந்தங்களார்ப்பிசையுந்தயங் குதாராரமும்விரவி, யெண்டிசைமருங்குமிடைநிலத்திடையு மிருள்கெழுவிசும்பினதகமுங், கொண்டனசிலம்புகுலுங்கின விலங்கல்கூற்றமுந்தலைபனித்ததுவே. (௧௯௪)

தட்டுப்போரதனுட்டமனியக்கடிப்புந் தாரினோடாரமுஞ் சரியப், பட்டுப்போயுருண்டா னவருளங்கொருத்தன் பருவ ரைகரியதொன்றனையான், றட்டப்போரியானைத்தூமகேத னனுக்தோற்குமோவொருவனுக்கென்று,மட்டுப்போரணிந்த மணிமுடிமன்னர்மயங்கினர்மானமுமிழந்தார் (௧௯௫)

வேறு.

பொருதாங்கழிந்து புகைகேதுவீழ வரிகேதுமுன்னமுடி ய,வெரிதாங்குவேலொடினியீங்குநின்றுபெறுகின்றதென்னை யெழுகென், றரிதாங்களாவதெளிதாகுமாறோரமர்செய்கை கொண்டுபிறர்முன், கரிதாங்களானகழன்மன்னரேறுவருமங் கோர்காளைகடிதே. (௧௯௬)

கணிகொண்டலர்ந்த நறவேங்கையோடுகமழ்கின்றகாந்த ளிதழா, லணிகொண்டலர்ந்தவனமாலைசூடியகிலாவிகுஞ்சி கமழ, மணிகுண்டலங்களிருபாலும்வந்துவரையாகமீதுதிவ ளத், துணிகொண்டிலங்குசுடர்வேலினோடுவருவானிதென் கொறுணிவே. (௧௯௭)

அருமாலைவேல்வலலமூலம்வகளுகுமவனுயிலாகவமைக, வெரிமாலைவேல்வ வினையார்கணிற்க விவனென்ஞெ டேற்க வெனவே, பொருமாலைவாள்கைபொலிகேடகத்தனணிபோ திலங்குமுடியன், செருமாலைமன்னரிறைற்தேவசேனனெதிரே சிவந்துசெலவே. (ககஅ)

மலைமேலுமென்னைமதியாதுவாழ்திமனிதர்க்குவந்துபடையாய், நிலமேலுநின்றுபொருவானினைந்துவருவாய்நினைக்கிது றுமே, சலமேலுமின்னவுடையாயைவென்றுதலைகொண்ட பின்னைநுமரைக், குலம்வேர்களைந்துகுடிபொன்றுவிப்பனி துயான்மகிழ்ந்தகுணனே. (ககக)

மலைமேலுநின்னைமதியாதுவாழ்வன்மனிதர்க்குவந்துபடையாய், நிலமேலுநின்றுபொருவான்புகுந்தநிலைகண்டுநின் றுமிநனே, சலமேயுரைத்தியிதுவோவுணுண்மைதழல்வேக வென்னவெதிரே, யுலமேசுதோளினுளிவேலினேடுமொருவானெதிர்ந்துபொருவான். (உ00)

வாள்வீசுமாறும்வடிவேலின்வந்த வடிவேல்விலங்கும்வகையுந், தோள்வீசுமாறுமவைமீளுமாறுமிடைசொல்லும்வீரமொழியுந், தாள்வீசுபோழ்துகழலேலங்குமாறுமெதிர்தாங்களார்க்குமொலியும், நாள்வீயலன்றியுரைவீயயாவர்நவில்வார்நமக்குமரிகே. (உ0க)

மாலாலெதிர்ந்துமலைவாயைநீடுபொரவைப்பதென்னையினியென், வேலாலழிப்பனெனவேலெறிந்துவிறல்வேகனுர்ப்ப மறவோன், மேலாவிலங்குமணிகேடகத்தினொருபால் விலங்கியொருபாற், றேலாதவாளினெறியத்துணிந்துசுடர்கான் றுவீழ்ந்தததுவே. (உ0உ)

எய்வேலறுத்துவறியானைநோக்கியெறியாதுநிற்பவவனே யெய்வேல்பெயர்த்துநிருமித்தஃதேந்திபுருமொத்துநேர்ந்து பொருதான், வெவ்வேறெருட்டியொருதோணிமிர்த்திவிரலொன்றுசுட்டிவரவே, வைவேனிறேடுநிமிர்கின்றதோளையறவீசினனம்மறவோன். (உ0ரு)

நெய்யுற்றவேலுமொருதோளும்வீழ வொருதோளினீடு
செருவே, செய்யுற்றபோழ்தினெதிரேவிலங்கியிதுதேவசே
னன்மொழியுங், கையுற்றதொன்றுகவலேலுனக்கிதுறுமாறு
போகவெனவு, மையுற்றகாளைவருவானைவாளினுயிர்வவ்வினு
னம்மறவோன். (உ0௪)

வேறு.

தாமமார்ந்தமணியைம்பாற்றையருதைமைத்துனனுஞ்
சேமமார்ந்ததனிச்செங்கோற்றேவசேனன்கைவாளாற்
சாமவண்ணன்றழல்வேகன்சாய்ந்தான்சாய்ந்தபொழுதத்தே
தூமமாரங்கமழ்குஞ்சிச்சுவணகேதுதோன்றினனல். (உ0ரு)

அஃதேயஃதேயங்காரவேகனுங்கோரயில்வாளால
வெய்தாங்குற்றுவீடினனன்றேநன்றேமறுமாற்ற
மைதோய்மலையுமண்ணகமு நமதாச்செய்வன்செய்யேனேற்
செய்தாரமருலகாள்வனிரண்டிலொன்றுதிண்ணமிதே. ()

என்னுவிரண்டுமருங்கினுமற்றிளநல்யானைக்குழாஞ்சூழப்,
பொன்னார்தேரும்புரவிகளுமிடைந்துபூமிபொறைகூர, முன்
னுற்செல்லவருவானைமுந்நீர்வண்ணன்றன்மாமன், மின்னார்
விளங்குவிற்வேலான்கண்டேவெகுண்டுமேற்சென்றான். ()

கானற்புரவிகளிமாவோடெதிர்ந்தகருங்கைமதவேழ
மானயானைதம்மோடேமலைந்ததேருமாறேற்ற
வீனமில்லாவிளையாரோடிளையார்திளைத்தாரிவ்வகையே
தானைதம்முட்டாக்கலுறத்தாமுந்தம்முட்டலைப்பெய்தார். ()

அருவியிலங்குமதயானையனலவூன்றியணைபோழ்திற்
றரவரோடுபடைபொருதல்கூடிற்றன்றுகுலவேந்தே
பொருவரென்னப்படுவாரங் கொருவர்போந்துபொரவொருவ
ரொருவிகிற்றலுரங்கொல்லோவென்றானுவனுமேந்தினன்.

சூரவரென்னுமுபசாரமிருக்ககோதைமிளிர்வேலாய
பொருவராயின்யாரோடும்பொருவர்பூமிவேண்டுபவ
ரொருவிகிற்பதுரங்கொல்லோவென்னுமுரையுமுணர்திவ
ணிருவேமுள்ளும்யார்பாலஃதுறுவதென்றானொளிமுடியான்

*ஆக்கவமைகவதுலேயவ்வரசனீதியாகிவிடிற் [னேந்தி*
*போக்கபொருவனென்ப்புகைந்து பொருவெஞ்சிலையோன்றிட*
*வேகயானைசெலவுந்திச்சிறுநாணெறிந்துவெஞ்சரங்கண் [ன்.*
*மாகமெல்லாமுடனடுங்கத் தொடங்கினனம்மழைபோல்வா*

*தொடங்குகின்றசுடுசரங்கள்சுருக்கியொருகைசெவிகாறு,*
*முடங்குமொருகை சிலைவளையா முடுக்குங்கண்டதித்துணை*
*யே, யிடங்களின்றிவிசும்பெல்லாமிருளவீர்க்கோடீர்க்குதைய*
*த், தடங்களின்றியடுசரமேமிடைந்ததரணிவட்டமெல்லாம்*

*சொல்லான்மலிந்தபுகழினன்சுவணகேதுசொரிகின்ற [தன்*
*கல்லார்கொண்டற்பெயல்போலுங்கணையின்மாரி கழல்வேந்*
*வில்லாற்செய்தவிசாலவட்டமேலுநாலுமருங்கினுமாய்க்*
*கொல்லாற்செய்தவேலாற்குக்குடையாய்நின்றுகவித்ததுவே*

*வில்லாற்செய்தவிசாலவட்டந்தன்னலந்தில்விலக்கப்பட்*
*டெல்லாத்திசையுஞ்சரஞ்சிந்தியிருளவீழுமெல்லைதன்னுட்*
*சொல்லாற்புகழ்தற்கரியான்பாற்றாணிவறியவாதலுந்திண்*
*மல்லாற்பெய்ததோளான்மேன்மாயவெம்போர்செய்குற்றான்*

*செய்யலுற்றமாயமதுஞ்சிலையுநிலையுஞ்சுருங்கியவைத்*
*தெய்யலுற்றபகழியையுமெண்ணிவேந்தனெதிர்செறுப்பான்*
*மையலுற்றமதயானையலைப்பவுந்திமாற்றானை*
*நையலுற்றயெனவுரையாநாமவாளிசிந்தித்தான். (௨௧௫)*

*தொடுத்தான்றெழுதவாளியதுசுவணகேதுகையகத்து*
*மடுத்தசிலையும்பகழியும்வெம்மனத்துக்கொண்டமாயமது*
*மடுத்துத்துணித்தப்புறமேகியரசர்குழாங்களிரியப்பாய்ந்*
*துடுத்ததூவிதோன்றாமைநிலத்தினுள்புக்கொளித்ததுவே.( )*

*அம்புஞ்சிலையுங்கைம்··றியவகத்தவிஞ்சைதுணிப்புண்டு,*
*வெம்புகின்றமனத்தினனாய் வெய்யோன்மீட்டும்விறலோன்*
*மேல், வம்புகொண்டவளையங்கள்கணையம்விட்டுவிட்டேறு,*
*செம்பொன்னாழிவகையெல்லாஞ்சென்றுபாயச்சிந்தித்தான்.*

இப்பாலிவாகள பொரும்பொழுதினியானையிரண்டுமெதிர் தாக்கிக், கைப்பாலெடுத்துக்கறைமருப்புமிடைந்துகண்களெரிசிந்தி, மெய்ப்பாலெடுத்துக்குத்தியுமெய்விலங்கிப்பாய்ந்துமொன்றொன்றைப், பொய்ப்பாலின்றியெடுத்திட்டுப்புடைத்தும்பெயர்த்தும்பொருதனவே. (உகஅ)

துண்டவேகப் புள்ளுயர்த்தான் றுளைக்கையானைசுடர் முடியான், புண்டரீகக் கொலையானைக் குடைந்துபோகும் பொழுதகத்துக், கொண்டவாளன் கேடகத்தன் குதிகொள் வான்போலெழுந்தெதிரே, மண்டுவானைவயவேந்தன் கண்டு வாளிமழைபொழிந்தான். (உகக)

மடுத்தவாளுங்கேடகமுங்கவசக்கண்ணுமாரபகமு, மடுத்துக்குத்திறேற்போலக்கழிந்ததம்புகழிதலுமே,யெடுத்துமறிக்கப்பட்டான்போலிலங்குபூணுமாரமுந்தேர், தொடுத்ததாமமாலையுமுன்சொரியவீழ்ந்தான்சுடர்வேலோன். (உஉ0)

வேறு.

தூவியார்சுவணக்கொடி, மேவினுன்படவேமிகை
மாவினர்படைவாரிபோ,ரோவியாங்குடைவுற்றதே. (உஉக)

வென்றுவேற்றவர்நின்றன, ரென்றமாற்றமிஞ்சத்தனு
நன்றுநன்றெனநக்குமேற், சென்றனன்சிறீசேனனே.(உஉஉ)

கடைந்தகார்க்கடல்போற்கலந், துடைநதவாட்படையோடுநேர்க், கடைந்தவான்சிறையாயினன், றிடைந்தவேற்படைவீரனே. (உஉங)

விஞ்சைவேந்தர்களேமிகை, யஞ்சுவாரெனவாயிடை
நஞ்சனூர்களைநக்குவை, வெஞ்சொலானவிளம்பினன். ( )

வாளர்வார்கழல்வீக்கிய, தாளர்தாமுடைந்தோடினு
ஞளைநாணுடைநங்கைமார், தோளைநாணிலர்தோய்வதே. ( )

பொன்றுமிவ்வுடலின்பொருட், டென்றுநிற்குமிரும்புக
ழின்றுநீர்கழிந்தீர்களாற், குன்றின்மேற்குடைவேந்திர்காள்.

மானமாமணிவீழ்ந்துயிர்க், கூனமாமெனவோடுவீர்
ஈனவார்மயிர்க்கேதமாங், கானமாவதுகாணுமே. (உஉஎ)

ஈண்டவின்னன்சொல்லலு, மீண்டுவிஞ்சையரேற்றன
ராண்டகைச்சுடரயிலைத் தூண்டினன்சுடர்வேலினன்.

மீண்டுவாளினர்விஞ்சையர், மண்டினரெதிர்மண்டலுங்
கண்டகண்டமதாயினர், விண்டவாபடைவீரரே. (உஉகூ)

கருவிப்புட்டிலின்கண்டமும், பொருவில்பக்கரைபபோழ்
களும், விரவிவெங்களவாயெலாம், புரவித்துண்டங்கள்போர்
த்தவே. (உ௩0)

உருப்புநீரவொள்வாள்களா, னெருப்புநீரவர்வீசலும்
பொருப்புவீழ்வனபோன்றன, மருப்புநீண்மதயானையே. ()

சீர்முகந்தசெஞ்சேற்றினுள், ளார்முகம்புகவாழ்ந்தரோ
நீர்முகங்கிலமுற்றபொற், றேர்முகஞ்சிதைவுற்றதே. (உ௩உ)

மாலும்வாட்படைப்போரினு, ளாலுமாமிசையானவன்
காலன்காணெனவந்தனன், சீலமானசிறீசேனனே. (உ௩௩)

மண்ணின்மேல்வருவாரொடு, மண்ணின்மேற்செருவல்ல
னே, விண்ணின்மேல்வருவாரொடு, விண்ணின்மேற்செருவ
ல்லனே. (உ௩ச)

வாய்ந்தபோரிவைவல்லீரே, லேந்துமின்படைபோங்தெ
னக், காய்ந்தகட்டுரைகேட்டலுஞ், சேர்ந்தனன்சிறீபாலனே

வேறு.

உவரியோங்குதிரையெனக், கவரிவேய்ந்தகலினமா
விவரவேறினரோ, வெவருமஞ்சுமீட்டினன். (உ௩ரு)

திரிவில்சாரிகைச்செயல், புரவிசேர்ந்துபொங்கின
வரிவில்வாளிமன்னரும், மருவுபோர்மயங்கினர். (உ௩எ)

வில்லுமவாளும்வேல்களுஞ், சொலின்றெழிற்கொளீஇ
யெல்லையின்றிப்பொழுதெலாந், தொல்லமர்தொடங்கினர். ()

வெல்லுநீரவிஞ்சையன், வில்லும்வீசுகுந்தமும்
வல்லிதின்மடித்தனன், மல்லலர்ந்தமரர்பினன் (உகக)

அற்றகுந்தமாண்டவச், செற்றலன்றெழித்துமேற
கொற்றவன்றன்கோகின்மேல், வெற்றிவாளின்வீசினன். ()

ஒளிதயங்குமொண்புயத், தெளிதமாவெறிந்தவா
ளுளிதமாவுடற்றினன், பளிதநாறுபண்பினன் (உசக)

தளிதயங்குதன்மதுக், களிதயங்குகண்ணியாற்
குளிதவாளினுற்றபுண், ணௌிதமாயிலங்குமே. (உசஉ)

இட்டவாளிறுத்தபின், விட்டமாவின்மேற்செலாத்
துட்டமாத்துரந்தனன், மட்டுவார்ந்தமாலையான். (உசங)

மாதிபோகுமானமா, மீதுபோகவிட்டவன்
சோதிகூடுசுடர்முடிக், கேதமாகவெண்ணினன். (உசச)

எண்ணினன்னெடுப்பலும், கண்ணியஃதுகருதிமா
மண்ணில்வாவியாங்குமேல், விண்ணின்மேலுமிக்கதே. ()

கொண்டதன்குசைக்குறி, கண்டுமென்னுகதியினல்
விண்டலத்தின்மீதுபோ, யண்டயத்தடுத்ததே. (உசரு)

வானின்வாவுவிஞ்சையன், மானமாமணிம்முடி
யேனமன்னனேதியான், மீனின்வந்துவீழ்ந்ததே. (உசஎ)

வேறு.

திருநிலையகமுடைச்செல்வன்செங்கதிர்
விரிநிலமணிமுடிமிளிர்ந்துவீழ்தலும்
பொருநிலையழிந்துபிற்புறக்கொடுத்தகு
பருநிலமலையவர்பரவைத்தானையே. (உசஅ)

வேயுடைவெள்ளிசேர்விலங்கல்வேந்தர்க
ளாயிடையுடைதலுமாழியான்மகன்
காய்வுடைமனத்தவன்கினகசித்திரன்
சேயிடைபுகுந்தனனின்றுசெப்பினன். (உசகூ)

உருவியவாளினனுடுத்தகச்சினன்
வெருவரவிழித்தனன்வீரம்வேட்டுமோ
டொருவனையொருவனஞ்சியோடுமே
லருவருப்புடையதவ்வாண்மையாகுமே. (௨௫௦)

மதிதொடுநெடுவரைமானவிஞ்சையர்
விதிப்புறனிதரைவெருவிமீண்டன
ரதிசயமிதுவெனவலரரக்கனன்
கதிர்விடுவெளையெயிறுடையகாளையே. (௨௫௧)

உடைந்தவர்மனங்களையுருவவீழ்த்திடு
மடந்தையர்வடிக்கணம்பல்லவாய்விடின்
மிடைந்தவர்தொடங்கியவீரக்கோட்டியு
ளடைந்தவரடுபடைக்கஞ்சல்வேண்டுமோ. (௨௫௨)

தானுடம்பிறந்ததற்பின்னுந்தன்றிறல்
வானுடன்புகழ்தரகிற்குமண்மிசை
மானுடருயிர்கொளமானமில்லிர்கா
ளூனுடம்பிதன்பொருட்டிடையல்வேண்டுமோ. (௨௫௩)

நெய்யினானிழன்றுநீர்நின்றநீளொளி
வெய்யவாளமரிடைவெருவியிட்டதங்
கையினாற்கருணையின்கவளங்கொள்ளிய
வையன்மார்போந்ததென்றசதியாடினான். (௨௫௪)

இன்னணமொழிந்தெதிர்தெழித்துமாற்றலர்
மன்னியகடற்படைமண்டிவாளினாற்
கன்னவிரொளினான்கண்டங்கண்டமாத்
துன்னியதுணிபலதொடரத்தோன்றினான் (௨௫௫)

விலங்குவேல்கொண்டையையுந்திவேற்றவர்
மலங்கமேற்செல்வதுமானமாமெனப்
பொலங்கலங்கழலொடுபுலம்பப்பூமிமே
லலங்கலாண்டக்தமரழுவந்தாங்கினான். (௨௫௬)

பத்திரக்கடிப்பினன்பைம்பொற்றாரினன்
சித்திரமணித்தொடர்திளைக்குந்தானையன்
கத்திகைக்கண்ணியன்காணும்பாலெலாக்
தொத்திணர்க்குஞ்சியான்காளைதோன்றினான். (௨௫௭)

வம்பமாவிருதுணிபட்டமாவொடு
செம்பொனாலியன்றதேர்சிந்திவீழ்ந்தன
கம்பமாவொழிந்தனகளிறுகாளைவாள்
வெம்புலால்விரையினும்வெறுத்ததில்லையே. (௨௫௮)

வார்குலாங்கருங்கழன்மன்னரேற்றவர்
நீர்குலாங்குருதியுட்குளிப்பநேரினி
யார்கொலேற்பவரெனவஞ்சவெஞ்சினக்
கார்குலாமுருமெனக்காளைதோன்றினான். (௨௫௯)

காளைநங்கனைகழற்கனகசித்திரன்
வாளமரழுவத்துமண்டினானெனக்
கேளவர்மொழிதலுங்கிரீவன்றம்பிமா
ராளிவர்கடற்படையனன்றெழுந்ததே. (௨௬௦)

வெருவிமுன்னுடைந்துபோய்ப்பெயர்ந்துவேற்றவ
ரொருவில்வாளழுவம்வந்துந்துமஃப்படை
புரவுநீரிருங்கடலோதம்போந்தபி
னரவநீர்வேலைமீதலைப்பதொத்ததே. (௨௬௧)

மன்னவற்கிளையவர்வயிரமால்வரை
யன்னவரயிற்படையரசவீரர்க
டன்னலர்க்கரும்படர்தோன்றத்தோன்றுபு
முன்னினர்கனன்றுபோர்முறுகமூட்டினார். (௨௬௨)

கண்ணிடைசிவந்துகைசுட்டிக்காய்ந்துதம்
பண்ணுடைமழகளிறுந்தினார்படை
யெண்ணிடையிடுமிடமின்றியெங்கணு
மண்ணிடையவரொடுமயங்கிநின்றதே (௨௬௩)

இலைதடுமாறினபகழியெங்கணுஞ்
சிலைதடுமாறினசிலைத்ததேர்க்குழா
முலைதடுமாறினபோலமான்றரோ
தலைதடுமாறினதடக்கைவேழமே. (உ௬௪)

முரிந்தனமணிநெடுந்தேர்கண்முத்துக
நெரிந்தனகளிறுடைமருப்புநேர்முகஞ்
சரிந்தனதலைபலதறுகணில்லவ
ரிரிந்தனரிழிந்ததுகுருதிநீத்தமே. (உ௬௫)

மரைமயிரணிந்தனமானமாப்பல
திரையெனவுருண்டனதிலதவெண்குடை
நுரையெனமிவந்தனநுந்துமப்புனற்
கரையெனக்கிடந்தனகளிற்றின்குப்பையே. (உ௬௬)

பெருகியகுருதியுட்பிறங்குசெந்தடி
யருகுடையளற்றினுளழுந்திப்பாகமே
சொரிகதிர்க்கேடகமுடிகடோன்றலாற்
பொருகளம்புற்றெடுக்கின்றபோலுமே. (உ௬௭)

மாடடைந்தெதிர்ந்துதம்வயிரத்தண்டினாற்
பீடடைந்தவர்பிடர்புடைப்பவானையின்
கோடடைந்துதிர்ந்தனகொடுமுட்கேதகைத்
தோடடைந்தொருவழித்தொகுதலொத்தவே. (உ௬௮)

குழைசுடர்ந்திலங்குதாரரசர்கோலமா
ணிழைசுடர்தோள்களாலெறியயானையின்
றழைசெவிமதமுகத்தொளிக்குஞ்சக்கர
மழைசொரிமுகில்புகுமதியமொத்தவே. (உ௬௯)

செருவரையனையதோண்மன்னர்சேனைபு
ளருவரைபுகுமயிலனையவாயின
கருவரையனையனகளிநல்யானையின்
பெருவரைமுகம்புகும்பிண்டிபாலமே. (உ௭௦)

மண்ணியன்மன்னர்கைமுறுக்கிவிட்டிடக்
கண்ணியல்யானைமேற்கணையம்பாய்வன
திண்ணியநெடுவரைச்சென்னிமீமிசை
விண்ணியல்விளங்குமின்விழுவபோன்றவே. (உஎக)

கடுத்துவீழ்கடாக்களிற்றுழவர்தந்தலை
யடுத்த * தீசகந்தமோடற்றுவீழ்வன
தொடுத்ததேன்றொடர்ந்தவீப்பிறங்கலோடுட
னுடுத்தமால்வரைமருங்குருவமொத்தவே. (உஎஉ)

அணியமுமாரமுங்கொடிஞ்சுங்கோலுமாத்
துணிவினைக்கவனமாத்துரக்கும்பாகரா
மணியவிர்தேரெனுமதலைநாயகர்
பணிவருங்குருதிநீர்ப்பவ்வத்தோட்டினர். (உஎங)

நுதலியசெருநிலநொறிற்செந்நீரினுண்
முதலையின்முதுகெனநிவந்ததோற்பரங்
கதலிகைகாம்பொடுகெடுகித்தாமரை
மதலையந்தாளணைவாளைபோன்றவே. (உஎச)

கைவரையொழுகியகணையம்பாய்ந்துதம்
மெய்வரைநிரைத்திடவீந்தயானைக
ணெய்வரைநீணிலத்தலத்துமேற்பல
மொய்வரைமுனையடிப்புண்டவொத்தவே. (உஎரு)

ஊடகமொளிர்மணிநாகங்கவ்விய
நாடகவிரிமதிநடுங்கிவீழ்வபோ
லாடகமணியவிர்கடகக்கையொடு
கேடகந்திசைதிசைகிளர்ந்துவீழ்ந்தவே. (உஎசா)

துளைப்படுபுண்ணுமிழ்சோரிபாய்ந்தெழக்
களிப்படுசிலம்பினகவந்தமாடுவ
முளைப்புடைமுடைத்திடைசுடரூட்டிய
விளக்கிடுகுற்றியின்விரிந்துதோன்றுமே. (உஎஎ)

* தலைச்சீரா, சீசகமென்னும் வடமொழித்திரிபு.

அஞ்சலரமர்க்கணமென்னுமார்வயல்
விஞ்சையர்குருதிநீர்வெள்ளந்தேர்த்தெழ
வெஞ்சினநாஞ்சிலாலுழுதுவெள்ளியான்
றஞ்சமார்தன்புகழ்தயங்கவித்தினான். (௨எஅ)

வெளியவன்மிளிர்மரைபுரையுஞ்செங்கணா
னளியினனமர்க்களங்கடாக்கொள்கின்றவவ்
விளையவன்யாரெனவினவிக்கேட்டனர்
கிளையமர்கிரீவனுக்கிளையவீரரே. (௨எகூ)

சுரமையரதிபதிதோமின்மாக்களுட்
பெரியவனிவனெனப்பிறந்தசெற்றமோ
டெரியவிர்வெகுளியாரிளையகாளையிங்
கொருவன்மேனால்வரும்யானையோட்டினார். (௨அ0)

இரத்தினகண்டனுமேனைவீரரும்
வரைத்தனர்வருவடைவீதிவாயெலா
மெரித்தனர்நால்வருமிளையகாளையை
முரித்திடுமுனிவினராகிமுற்றினார் (௨அக)

ஒடுங்கினனரசிளங்குமரனோவென
வுடங்கலந்தொல்லொலியெழுந்ததாயிடை
மடங்கலில்கருங்கடன் மலங்கிற்றொத்தது
தடங்கமழ்சுரமைநாட்டரசன்றானையே. (௨அ௨)

எரிபுரையுளைகளோடிலங்குவெண்பிறை
விரிவனவெனவிளங்கெயிற்றொடாயிடை
யரியரசடைந்ததொன்றதனையேறினான்
புரிவகைநாஞ்சிலும்புதியதெய்தினான். (௨அ௩)

தெய்வவாய்நாஞ்சிலுஞ்செங்கட்சீயமு
மையனுங்கெய்தலுமதிரவார்த்தது
வையமாளிளையவன்றானைமாற்றலர்
மையன்மாயானைகண்மயங்கியிட்டவே. (௨அ௪)

பொருபடைபுகைந்தவாவழுங்குமாயிடைச்
செருவுடையவரகன்செல்வமார்பக
முருவுடைநாஞ்சிலானுழுதிட்டானரோ
மருவுடையவர்தமைமயக்குமைந்தனே. (௨௮௫)

ஒருவனோர்நாஞ்சிலானுழித்தீப்புரை
யிருவரோடிருவரையானைநான்கொடு
செருவினுளமர்வெலக்கேட்டுச்சேர்ந்தனன்
கருவரையனையதோட்கனககாமனே. (௨௮௬)

காளையக்கனகசித்திரனுங்காய்ந்துதன்
வாளைவாய்துடைத்தெதிர்மடுப்பமற்றவன்
றோளையுஞ்சுடர்கெழுநாஞ்சில்வாயினு
லாளியேறனையவனழுந்தவூன்றினன். (௨௮௭)

வனைகதிரிலங்குதோள்வயிரகண்டனோ
டனைவருமலாயுதற்கமர்தொலைந்ததுங்
கனகசித்திரனதுபாடுங்கண்டரோ
வனல்படுமனத்தனங்கொருவனாயினன். (௨௮௮)

பொடித்தலைநிலத்தவர்போருமாண்மையு
முடித்திடுகெனமுனிந்தெழுந்துமூரிவான்
மடுத்ததோர்வரைதனைவயிரக்கைகளா
லெடுத்தனனிரத்தினகிரீவனென்பவே. (௨௮௯)

வரிந்துவீழ்கச்சையன்வனைந்ததாடியன்
முரிந்தெழுபுருவத்தன்முழங்குதீயென
வெரிந்தனனிறுவரையெடுத்துமேற்செல
விரிந்ததுசுரமையரிறைவன்றானையே. (௨௯௦)

ஆங்கவனடைதலுமருக்ககீர்த்திகை
வாங்குவிற்புகுந்ததுவாளியொன்றவ
னேங்கிருந்தாணியிற்சுடர்ந்ததொல்லெனத்
தாங்கருந்திறலவன்தாரித்தேவினன். (௨௯௧)

தொடுத்தனுந்தாந்த தவிட்டலைதோளிடை
மடுத்தனுகிழித்தனுமண்ணிலுட்புகக்
கடுத்தனுகண்டுபின்றவர்கடம்மையும்
படுத்தனுபகலவன்பகழியென்பவே. (௨௬௨)

வரையொடுவரையெனமறிந்துமண்ணின்மேல்
விரையுடையலங்கலான்வீழுமாயிடைத்
திரையொடுகனைகடலுகலங்கிச்சிந்தின
புரையுடைவிலங்கலும்புலம்புகொண்டவே. (௨௬௩)

வேறு.

தம்பியர்பாடுமக்களிறந்ததுந்தனக்குப்பாங்காய்
வெம்பியவீரர்போருள்விளிந்ததும்விரைவினோடிச்
செம்பினையுருக்கிவெய்தாய்ச்செவிமுதற்சொரிந்ததேபோ
லம்பொன்செயாழியானுக்குரைத்தனரரக்குண்கோலார். ()

ஆங்கவர்மொழிந்தபோழ்தினருவரைகரியதொப்பா
னீங்கிவர்மாற்றன்றீண்டிருந்தினியென்னையென்னு
வாங்குநீருலகில்வாழுமுயிர்களைவாரிக்கொண்டு
வீங்குநீர்க்கடலுட்பெய்யும்விஞ்சையைவிடுக்கநேர்ந்தான். ()

ஓர்ந்தவன்மனத்துவிஞ்சையொருபுடையெய்தலோடுஞ்
சார்ந்தனுசண்டவேகைபணிபணியென்றுசார
வார்ந்தநீருலகின்வாழுமனிதரைவல்லையேகித் [ன்.
தேர்ந்துகொண்டொருவரின்றித் தெய்வநீசெகுத்திடென்று

கொடியவன்விடுத்தபோழ்திற்கூற்றுவன்றன்னைக்கூவி
வடியெயிறிலங்கநக்குவாழியதோள்களின்று
விடுகதிராழிவெய்யோன்வேண்டவென்வாயுட்பட்டு
முடியுமிவ்வுலகநீயுமுறைத்தொழின்முடித்தியென்ன (௨௬௭)

அணங்குகள்குழுமியாமும்பெருவயிறுார்துமென்று
துணங்கைகோத்தாடிநக்குச்சுடரிலைச்சூலமேந்தி
வணங்குபுகுழுமற்றமாபெருந்தெய்வம்வந்து
மணங்கமழ்சுரமைநாடன்றனைமேன்மடுத்ததம்மா. (௨௬௮)

